# விருதுநகர் மாவட்டக் கல்வெட்டுகள்

## தொகுதி - 1

# Virudhunagar District Inscriptions - Vol. I




பொதுப் பதிப்பாசிரியர்

முனைவர் சீதாராம் குருமூர்த்தி இஆப,

முதன்மை ஆணையர்



தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை, சென்னை - 600 008.

2008

தமிழ்நாட்டுக் கல்வெட்டுகள் வரிசை எண் – 30

# விருதுநகர் மாவட்டக் கல்வெட்டுகள்

## முதல் தொகுதி

பொதுப் பதிப்பாசிரியர் :
முனைவர் சீதாராம் குருமூர்த்தி, இ.ஆ.ப.,
முதன்மை ஆணையர்

பதிப்பாசிரியர்கள் :
பொ. இராசேந்திரன்
முனைவர் வெ. வேதாசலம்
முனைவர் சொ. சாந்தலிங்கம்

தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை
எழும்பூர், சென்னை.
2008

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Tilte | : | **Virudhu Nagar District Inscriptions Volume One** |
| General Editor | : | Principal Commissioner |
| Copyright | : | Tamilnadu State Department of Archaeology |
| Subject | : | Epigraphy |
| Language | : | English & Tamil |
| Publication No. | : | 191 |
| Year | : | 2008 |
| Type Point | : | 12 pt. |
| No. of Page | : | xv + 312 |
| Paper used | : | 80 GSM Maplitho |
| Type Setter | : | Gankarani Kaniniyagam<br>Royapettah, Chennai-14. ☎ : 2861 3747 |
| Printer | : | **TAMCOS**<br>Royapettah, Chennai - 600 014. |
| Publisher | : | Tamil Nadu State Department of Archaeology<br>Tamil Valarchi Valagam,<br>Halls Road, Egmore,<br>Chennai - 600 008. |
| **Price** | : | **Rs. 174/-** |


முன் அட்டை : ஸ்ரீவில்லிபுத்தூர் கோயில் கோபுரம்
பின் அட்டை : இருக்கண்குடி கண்மாய் மடை,
வட்டெழுத்துக் கல்வெட்டு, சாத்தூர்
அட்டைப்பட வடிவமைப்பு : **மு.த. ஸ்ரீதரன்,** நிழற்படமெடுப்பவர்
**அர. வசந்தகல்யாணி,** கல்வெட்டாய்வாளர்

# பதிப்புரை

கடந்த சில ஆண்டுகளில் தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை தமிழ்நாட்டுக் கல்வெட்டுகள் அனைத்தையும் விரைந்து படியெடுத்து வெளியிட வேண்டும் என்ற நோக்கில் முனைப்புடன் செயல்பட்டு வருகிறது. இதற்கெனத் 'தீவிரக் கல்வெட்டுப் படியெடுக்கும் திட்டத்தை' நடைமுறைப்படுத்திப் பல மாவட்டங்களில் உள்ள கல்வெட்டுகளைப் படியெடுத்து வருகிறது. இதனால் தமிழ்நாட்டில் பெரும்பாலான மாவட்டங்களில் கல்வெட்டுகள் படியெடுக்கும் பணி நிறைவடைந்துள்ளது. கால வெள்ளத்தில் அழிந்து கொண்டிருந்த கல்வெட்டுகள் காக்கப்பட்டுள்ளன. வரலாற்று உலகிற்குப் பயன்படும் பல புதிய கல்வெட்டுகள் கண்டறியப்பட்டுள்ளன. தீவிரக் கல்வெட்டு ஆய்வு முகாமின் மூலமாக விருதுநகர் மாவட்டத்தில் படியெடுக்கப்பட்ட கல்வெட்டு களே தற்போது இந்நூலில் வெளியிடப்படுகின்றன. இம்மாவட்டத்திலுள்ள அருப்புக்கோட்டை, திருச்சுழியல், காரியாபட்டி, சாத்தூர், விருதுநகர் முதலிய ஐந்து வட்டங்களில் உள்ள கல்வெட்டுகள் முதல் தொகுதியாக இந்நூலில் இடம்பெற்றுள்ளன.

இந்நூலில் இடைக்காலத் தமிழ்நாட்டு அரசியல், பொருளாதாரம், சமுதாயம், நாகரிகம், பண்பாடு ஆகியவற்றைப் புரிந்துகொள்ள துணைநிற்கும் கல்வெட்டுகள் உள்ளன. இக்கல்வெட்டுகளைப் படியெடுத்துப் படித்துப் பதிப்பித்த தொல்லியல் துறை அலுவலர்கள் பொ. இராசேந்திரன், முனைவர் வெ. வேதாசலம் முனைவர் சொ. சாந்தலிங்கம் ஆகியோர் பாராட்டுக்குரியவர்கள். இந்நூலின் செழுமைக்கும், அச்சேறுவதற்கும் துணைபுரிந்தவர்தொல்லியல் துணைக் கண்காணிப்பாளர் முனைவர் நா. மார்க்சிய காந்தி ஆவார். வரலாற்றுக்கு அடிப்படை ஆதாரங்களைச் சுமந்துவரும் இக்கல்வெட்டுத் தொகுதியை வரலாற்று உலகம் போற்றி வரவேற்கும் என நம்புகிறேன்.

சீதாராம் குருமூர்த்தி
**முதன்மை ஆணையர்**

# முன்னுரை

விருதுநகர் மாவட்டத்தில் களஆய்வுசெய்து படியெடுக்கப்பட்ட கல்வெட்டுகளின் முதல்தொகுதி இந்நூல். இதில் அருப்புக்கோட்டை, திருச்சுழியில், காரியாபட்டி, விருதுநகர், சாத்தூர் முதலிய ஐந்து வட்டங்களிலுள்ள கல்வெட்டுகள் இடம்பெற்றுள்ளன. இம்மாவட்டத்தில் காலந்தோறும் அரசியல், சமூகம், பொருளாதாரம், சமயம், கலை ஆகிய வற்றில் நிகழ்ந்த வளர்ச்சி, மாற்றங்களைக் குறித்து இவை அறியவுதவுகின்றன. ஒவ்வொரு ஊரிலும் உள்ள கல்வெட்டுகள் வரலாற்றிற்குப் பல புதிய செய்திகளைத் தருகின்றன.

## அருப்புக்கோட்டை வட்டம்

### அருப்புக்கோட்டை

அருப்புக்கோட்டை மீனாட்சிசொக்கநாத சுவாமி கோயிலில் கி.பி. 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பல கல்வெட்டுகள் உள்ளன. முதலாம் சடையவர்மன் குலசேகரன், முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன், எம்மண்டலமும் கொண்டருளிய குலசேகரபாண்டியன் ஆகியோரது பல கல்வெட்டுகள் உள்ளன. இவை இவ்வூரின் பழைய பெயர் 'செங்காட்டிருக்கை இடத்துவளி' என்று தெரிவிக்கின்றன. இக்கோயிலுக்குக் கொடுக்கப்பட்ட நிலக் கொடைகள் பற்றிக் கூறுகின்றன. சில கல்வெட்டுகள் இக்கோயிலில் எழுந்தருளுவிக்கப்பட்ட இலிங்கபுராணதேவர், ஆளுடையபிள்ளையார், துர்க்கை, அருந்தவஞ்செய்தநாச்சியார் பற்றிய அரிய செய்திகளைச் சொல்கின்றன. பிற்காலப் பாண்டியர் காலத்தில் இடத்துவளி என்றழைக்கப்பட்ட அருப்புக்கோட்டை ஊரிலுள்ள சொக்கநாதர் கோயிலைச் சுற்றி இருந்த வீரபாண்டியன் பெருந்தெரு, விக்கிரமபாண்டியன் பெருந்தெரு ஆகியவற்றில் தென்னிலங்கை வளஞ்சியர் என்றழைக்கப்பட்ட இலங்கை வணிகர் குழுவினர் வாழ்ந்துள்ளனர். இவ்வூர் பழிவிலங்கிப் பெருந்தெருவிலும் வணிகர்கள் வாழ்ந்துள்ளனர் என்று கல்வெட்டுகள் கூறுகின்றன. கல்வெட்டுகள் மூலம் சொக்கலிங்கபுரம் சிவன்கோயிலின் பழைய பெயர் குறள்மாணிசுவரமுடையார் கோயில் என்பதை அறியமுடிகிறது.

சொக்கலிங்புரம் ஊரணி பிற்காலப்பாண்டியர் காலத்தில் தோற்றுவிக்கப்பட்ட பழமையான குளமாகும். இதனை கி.பி. 1193-ல் சோழகங்கன் மைந்தன் அருளாளரழகப் பெருமாள் என்ற பாண்டிய அரசனின் அதிகாரி உருவாக்கியுள்ளதை ஊருணியின் தூம்புப் பகுதியிலுள்ள கல்வெட்டு கூறுகிறது.

அருப்புக்கோட்டை வாழவந்த அம்மன் கோயிலில் உள்ள கல்வெட்டுகள் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் திருவாலவாயுடையான் சோழகங்கன் அக்கோயிலை எடுத்தது பற்றியும் அதற்குப் பல தானங்கள் வழங்கப்பட்டதையும் தெரிவிக்கின்றன. அருப்புக்கோட்டை இராமலிங்காமில் அருகில் உள்ள தம்பி உடையத்தேவர் என்றழைக்கப்பட்ட சேதுபதியின்

கல்வெட்டு ரெகுநாத சேதுபதிக்குப் புண்ணியமாக அருப்புக்கோட்டை வாளவந்தம்மனுக்கு பொம்மக்கோட்டைப் பகுதியில் நிலக்கொடை அளித்ததைக் கூறுகிறது.

### கோவிலாங்குளம்

இவ்வூரின் பழம்பெயர் கும்பனூர் ஆகும். இவ்வூரில் முதலாம் குலோத்துங்கசோழன் காலத்தில் சமணசமயத் தீர்த்தங்கரர்க்குக் கோயில் ஒன்று எடுக்கப்பட்டதைக் கல்வெட்டுகள் கூறுகின்றன. அம்பலப்பசாமி என்ற பெயரில் இன்று இது அழைக்கப்படுகிறது. இம்மாவட்டத்தில் சமணம் சிறப்புற்று விளங்கியது என்பதற்கு எடுத்துக்காட்டாக இது விளங்கி வருகிறது. இங்கு குலோத்துங்கசோழன் காலத்தில் சமணக் கோயிலோடு தண்ணீர்ப் பந்தல் அமைக்கப்பட்டுத் தாகம் தணிக்கப்பட்டது பற்றியும் இக்கோயிலிலுள்ள கல்வெட்டு தெரிவிக்கிறது. இதனை உருவாக்கிய வள்ளலின் சிறப்பை பாடல் கல்வெட்டு ஒன்று எடுத்துக் கூறுகிறது. கோவிலாங்குளத்தில் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் தோற்றுவிக்கப்பட்ட பெருமாள் கோயில் ஒன்றும் உள்ளது.

### குலசேகரநல்லூர்

அருப்புக்கோட்டையிலிருந்து திருச்சுழியில் செல்லும் வழியில் உள்ள இவ்வூரில் பிற்காலப்பாண்டியர் காலத்தில் எடுக்கப்பட்ட சிவன்கோயில் ஒன்று கல்வெட்டுகளுடன் காணப்படுகிறது. இவ்வூர் முனியாண்டிகோயில் தூணில் உள்ள கல்வெட்டு மணக்காவூருடையான் மணியன் கூத்தாடுவான் செய்த தருமம் பற்றித் தெரிவிக்கிறது. இக்கல்வெட்டில் எம்மண்டலமும் கொண்டருளிய குலசேகரபாண்டியனின் 23வது ஆட்சியாண்டோடு சகஆண்டு 1212 குறிப்பிடப்படுகிறது. இது குலசேகரபாண்டியனின் ஆட்சிகாலத்தை வரையறுத்துக் கூற உதவும் முக்கிய கல்வெட்டாகும்.

### செட்டிக்குறிச்சி

பிற்காலப்பாண்டியர் காலத்தில் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் எடுக்கப்பட்ட சிவன், திருமால் ஆகியோர்க்குரிய கோயில்கள் இவ்வூரில் இருந்திருப்பதைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. இவ்வூர் பெருந்துவளி என்றழைக்கப்பட்டுள்ளது. ராஜராதித்தநல்லூர் என்ற பெயரும் இதற்கு இருந்துள்ளது. இவ்வூரிலுள்ள வரதாரசப் பெருமாள் கோயில் என்ற கோயிலின் பழம்பெயர் புரவுவரிவிண்ணகர எம்பெருமான் கோயில் என்பதைக் கல்வெட்டால் அறியமுடிகிறது.

### பாலவநத்தம்

பாலவநத்தம் சிவன்கோயில் இங்குள்ள பிற்காலப்பாண்டியர் கல்வெட்டுக்களில் கயிலாயமுடையார் கோயில் என்றும் புரவரிஈச்சுரம் என்றும் அழைக்கப்பட்டுள்ளது. சிவன்கோயிலில் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன், குலசேகரபாண்டியன் ஆகியோரது கல்வெட்டுகள் காணப்படுகின்றன. சிவபாதசேகரநல்லூர் என்பதே பாலவநத்தத்தின் பழைய பெயராகும். இப்பெயர் முதலாம் இராசராச சோழனுக்குரிய பெயராகும்.

### மேட்டுப்பட்டி - (பந்தல்குடி அருகிலுள்ளது)

இவ்வூரிலுள்ள பெருமாள்கோயில் ‘குலசேகர விண்ணகரப் பெருமாள் கோயில்’ என்ற பெயரில் பிற்காலப் பாண்டியர் காலத்தில் எடுப்பிக்கப்பட்டதை இங்குள்ள பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகள் கூறுகின்றன. இக்கோயிலில் உள்ள முதலாம் சடையவர்மன்

குலசேகரபாண்டியனின் கல்வெட்டுகள் இக்கோயிலுக்கு அளிக்கப்பட்ட நிலக்கொடை பற்றித் தெரிவிக்கின்றன. இன்று மேட்டுப்பட்டி என்று அழைக்கப்படும் இவ்வூரின் பழம்பெயர் நாகூர் ஆகும்.

## திருச்சுழியல் வட்டம்

### திருச்சுழியல்

திருச்சுழியலில் உள்ள திருமேனிநாதசுவாமி கோயில் இம்மாவட்டத்தில் புகழ்பெற்ற சிவத்தலங்களில் ஒன்றாகும். இங்கு கி.பி. 10ஆம் நூற்றாண்டு முதல் கல்வெட்டுகள் உள்ளன. இங்குள்ள பழமையான பாண்டியர் கல்வெட்டில் 'அரிகேசரி ஈஸ்வரம்' என்று இது அழைக்கப்படுகிறது. இங்குள்ள பாண்டியனின் வட்டெழுத்துக் கல்வெட்டுகள் இதனைத் திருமூலஸ்தானம் என்றும் அழைக்கின்றன. இங்குள்ள முதலாம் இராசராசசோழனின் வட்டெழுத்துக் கல்வெட்டு இக்கோயிலுக்கு அளிக்கப்பட்ட விளக்குக்கொடை பற்றிக் கூறுகிறது. மதுரை நாயக்கர் காலத்தில் இக்கோயிலுக்குப் பலவூர்கள் தானமாக அளிக்கப்பட்டுள்ளன. கல்வெட்டுகளில் திருச்சுழியல் என்றழைக்கப்படும் இவ்வூர் தற்போது திருச்சுழி என்று சுருங்கி வழங்குகிறது.

### பள்ளிமடம்

கி.பி. 10ஆம் நூற்றாண்டில் ஆட்சிபுரிந்த சோழன் தலைகொண்ட வீரபாண்டியனின் அண்ணன் சுந்தரபாண்டியனுக்காக எடுக்கப்பட்ட பள்ளிப்படை கோயில் பள்ளிமடத்தில் உள்ளது. இதுவே தற்போது காளநாதசுவாமிகோயில் என்று வழங்கப்படுகிறது. பள்ளிப்படை என்றழைக்கப்பட்ட இவ்விடமே தற்போது பள்ளிமடம் என்று மாறியுள்ளது. பள்ளிமடம் சுந்தரபாண்டிய ஈஸ்வரமுடையார் கோயிலில் சோழன் தலைகொண்ட வீரபாண்டியனின் பல கல்வெட்டுகள் உள்ளன. இவை இக்கோயிலுக்குக் கொடுக்கப்பட்ட பல்வகைக் கொடைகள் பற்றி எடுத்துக் கூறுகின்றன. இக்கோயிலைச் சார்ந்து மகாவிரதிகளின் சைவமடம் ஒன்று இருந்துள்ளது. பள்ளிமடம் சிவன்கோயிலின் முன்மண்டபத்திலுள்ள வட்டெழுத்துக் கல்வெட்டுகள் வெண்புநாட்டுக் குறண்டி என்ற ஊரில் இருந்த புகழ்பெற்ற சமணப்பள்ளிக்கு அளிக்கப்பட்ட தானங்கள் பற்றித் தெரிவிக்கின்றன. காரியாபட்டி வட்டத்தில் ஆவியூர்க்கு அருகிலுள்ள குறண்டி என்ற ஊரில் இருந்த இச்சமணப்பள்ளி அழிந்துபட்ட நிலையில் அங்கிருந்த சமணப்பள்ளியின் கல்வெட்டு பொறித்த கட்டடக் கற்கள் பள்ளிமடத்திற்குக் கொண்டு வரப்பட்டு பள்ளிமடம் சிவன்கோயில் முன்மண்டபம் கட்டுவதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன. இக்கல்வெட்டுகள் கி.பி. 8-9 ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும்.

### கல்லுமடை

இவ்வூரில் உள்ள சிவன்கோயிலில் கி.பி. 10ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சடையன்மாறனின் இரண்டு வட்டெழுத்துக் கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இவை கேரளசிங்க முத்தரையன் என்பவன் சாழநாட்டுத் திருப்பாலையூர் கோயிலுக்கு (கல்லுமடை சிவன்கோயிலுக்கு) நிலமளித்ததையும், திருநந்தாவிளக்கு அளித்ததையும் குறிப்பிடுகின்றன. இக்கோயிலின் அதிட்டானத்தில் கி.பி. 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த எம்மண்டலமும் கொண்டருளிய சுந்தரபாண்டியன், மாறவர்மன் குலசேகரபாண்டியன், சடையவர்மன் விக்கிரமபாண்டியன் கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள்ளன. இவை திருப்பாலையூர் இறைவனுக்கு நிலக்கொடை அளித்ததைத் தெரிவிக்கின்றன.

### நரிக்குடி

நரிக்குடிக்கு அருகிலுள்ள விருபாட்சிநாதர் கோயிலில் ஏராளமான கி.பி. 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த துண்டுக் கல்வெட்டுகள் உள்ளன. இவை காளையிருக்கை மானையூர் என்ற ஊரில் இருந்த விக்கிரமபாண்டிய விண்ணகர ஆழ்வார்கோயில் மற்றும் மானையூர்ச் சிவன்கோயிலுக்கு அளிக்கப்பட்ட நிலக்கொடை பற்றித் தெரிவிக்கின்றன. மேலும் இப்பகுதி களில் பிராமணர் ஊரான பிரமதேயம் ஒன்று ஏற்படுத்தப்பட்டதையும் தெரிவிக்கின்றன.

### மானூர்

நரிக்குடிக்கு அருகிலுள்ள மானூர்க் கோயிலில் அவ்வூரில் இருந்த அனாகுலஈஸ்வரம் என்ற சிவன் கோயிலுக்கு அளிக்கப்பட்ட தானங்களைப் பற்றித் தெரிவிக்கும் பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகள் உள்ளன.

### மறையூர்

மதுரை சொக்கலிங்க நாயக்கருக்குப் புண்ணியமாகச் சிதம்பரசுவாமிக்கு ஊர் ஒன்று மானியமாக அளிக்கப்பட்டதை மறையூரிலுள்ள தனிக்கல் கல்வெட்டு தெரிவிக்கிறது.

### பிறவூர்கள்

பூமாலைப்பட்டியிலுள்ள கல்வெட்டு தீப்பாய்ந்து இறந்துபோன பெண்ணுக்கு எடுக்கப்பட்ட மாலைகோயில் பற்றிக் கூறுகிறது. வீரசோழன் பெருமாள்கோயிலில் உள்ள பிற்காலப் பாண்டியர்காலக் கல்வெட்டு அவ்வூரில் இருந்த கயிலாசமுடையார் கோயில் பற்றிக் கூறுகிறது. நாகூர் திடலில் நடப்பட்டுள்ள கி.பி. 1105ஐ சார்ந்த ஸ்ரீவல்லபன் கல்வெட்டு சூரியதேவனான சேதிராயர், கங்கைகொண்டான் ராசேந்திரசோழன் என்ற இரு அதிகாரிகளிடையே ஏற்பட்ட பூசலையும் அதன்பின் ஏற்பட்ட தீர்வையும் பற்றித் தெரிவிக்கும் முக்கிய கல்வெட்டாகும். மறவர்பெருங்குடியில் உள்ள நந்தி சிற்பத்தில் உள்ள கல்வெட்டு சுந்தரபாண்டியன் காலத்தில் அச்சிற்பம் செய்யப்பட்டதை எடுத்துக் கூறுகிறது.

பரளச்சிப் பகுதியிலுள்ள பிற்காலப்பாண்டியர் கல்வெட்டுகள் அவ்வூரைப் பல்லவகுலாந்தக நல்லூர் என்று குறிப்பிடுகின்றன. இப்பெயரே பரளச்சி என்று மாறிவிட்டது. இவ்வூரில் திருமேற்கோயில் என்றழைக்கப்பட்ட பெருமாள்கோயில் இருந்ததை சுந்தரபாண்டியனின் கல்வெட்டு கூறுகிறது. பரளச்சிக்கு அருகிலுள்ள தொப்பலாக்கரையின் பழம்பெயர் குளத்தூர் என்பதை அங்குள்ள கல்வெட்டுகள் மூலம் அறியமுடிகிறது. இங்கு முதலாம் குலோத்துங்கன் காலத்தில் செய்விக்கப்பட்ட துர்க்கையின் வாகனமான சிம்மத்தின் சிற்பம் கல்வெட்டுடன் காணப்படுகிறது. இவ்வூரிலுள்ள பெருமாள்கோயிலில் கி.பி. 13ஆம் நூற்றாண்டு கல்வெட்டுகள் உள்ளன. இவை இதனைக் குளத்தூர் திருமேற்கோயில் தேவபிரான்கோயில் என்று குறிப்பிடுகின்றன. பெருமாள்கோயில் கல்வெட்டு ஒன்றின் மூலமாக இவ்வூர் 'விற்பொறிவீரப்பெரும்பள்ளி' என்ற பெயரில் இருந்த சமணப்பள்ளிக்கு நிலக்கொடை அளிக்கப்பட்டதை அறியமுடிகிறது. இவ்வூரில் சமணப்பள்ளி இருந்ததை உறுதி செய்யும் வகையில் இரண்டு சமணத் தீர்த்தங்கரர் சிற்பங்கள் இவ்வூர் குளக்கரையில் காணப்படுகின்றன.

# காரியாபட்டி வட்டம்

காரியாபட்டி வட்டம் ஆவியூர்க்கு அருகில் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட சிவன்கோயிலில் இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் முதலாம் சடையவர்மன் விக்கிரம பாண்டியன் கல்வெட்டுகள் உள்ளன. வயலூர் நாட்டு ஆவியூர் இராசேந்திர சோளீசு வரமுடைய நாயனாற்கு ஊருக்குள் வணிகம் செய்யும் பொருட்கள் மீது விதிக்கப்பட்ட வரிப்பணம் தானமாக அளிக்கப்பட்டுள்ளதைச் சுந்தரபாண்டியன் கல்வெட்டு தெரிவிக்கிறது. அக்காலத்தில் ஊருக்குள் நடைபெற்ற வணிகம் பற்றி இக்கல்வெட்டு அறிய உதவுகிறது. குண்டுக்குளம் நீர்நிலைக் கல்வெட்டு கருப்பணக்குடும்பன் செய்த தர்மம் பற்றிக் கூறுகிறது. கீழஅழகியநல்லூரில் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் நீடூர் கிழவன் சொக்கன்எனக்கு நல்லபெருமாள் என்பவன் கிணறு ஒன்றை தோற்றுவித்ததைத் தெரிவிக்கிறது. முடுக்கன்குளம் அம்பலவாண சுவாமி கோயிலிலும் சூரனூர் கயிலாசநாதர் கோயிலிலும் உள்ள பிற்காலப்பாண்டியர் காலத்தினைச் சார்ந்த ஏராளமான துண்டுக்கல்வெட்டுகள் அக்கோயிலுக்குக் கொடுத்த கொடைகள் பற்றிக் கூறுகின்றன. இதேபோன்று கம்பிக்குடியிலும் தொட்டியன்குளத்திலும் பிற்காலப்பாண்டியர் கல்வெட்டுகள் உள்ளன.

**மல்லாங்கிணறு**

இவ்வூரில் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் பிற்காலப்பாண்டியர் காலத்தில் எடுக்கப்பட்டு நாயக்கர், ஆங்கிலேயர், மற்றும் தற்காலங்களில் புதுப்பித்துக் கட்டப்பட்ட சென்னசேசவப்பெருமாள் கோயில் உள்ளது. இங்கு திருப்பணியின்போது பிரித்து வைக்கப்பட்ட கட்டடக்கற்களில் தொடர்பில்லாத நிலையில் பல துண்டுகள் உள்ளன. இவை இப்பகுதியின் வரலாற்றை அறிய ஓரளவு துணை செய்கின்றன. மகாமண்டபம் நிலைவாசலில் உள்ள கல்வெட்டு இவ்வூருக்குச் செம்பனூரான குணகல்யாணநல்லூர் என்ற பெயர் இருந்ததை உணர்த்துகிறது. இப்பெயர் காலப்போக்கில் மறைந்து இவ்வூருக்கு மல்லாங்கிணறு என்ற பெயர் பிற்காலத்தில் ஏற்பட்டுள்ளது. இவ்வூரில் கயிலாயமுடைய நாயனார் கோயில் என்ற பெயரில் ஒரு சிவன்கோயில் இருந்துள்ளதை ஒரு கல்வெட்டால் அறியமுடிகிறது.

# விருதுநகர் வட்டம்

விருதுநகர் வெயிலுகந்த அம்மன் கோயிலில் உள்ள கல்வெட்டுகள் 19ஆம் நூற்றாண்டில் நாடார் சமூகத்தினர் இக்கோயில் கட்டடங்களை உருவாக்கியதைத் தெரிவிக்கின்றன. இவற்றில் உள்ள ஒரு கல்வெட்டு இவ்வூருக்கு 'விருதுபட்டி' என்ற பெயர் இருந்ததைப் புலப்படுத்துகிறது. மன்னார்கோட்டையில் உள்ள கல்வெட்டு வணிகன் ஒருவனின் நலத்திற்காகத் தன்னுயிரைத் தந்த வீரன் ஒருவனைப் பற்றித் தெரிவிக்கும் அரிய கல்வெட்டாகும்.

முத்துலாபுரம் பாறையில் கி.பி. 12ஆம் நூற்றாண்டில் இருஞ்சோணாட்டு வீரபாண்டிய புரத்தினைச் சார்ந்த ஒருவன் செக்கு ஒன்றை உருவாக்கியதைத் தெரிவிக்கும் கல்வெட்டு உள்ளது. செங்குன்றாபுரத்தில் உள்ள சிவன் மற்றும் பெருமாள்கோயில்களில் உள்ள கல்வெட்டுகள் கி.பி. 13ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பிற்காலப்பாண்டியர் கல்வெட்டு களாகும். இவ்வூர் அபிமானமேருபுரம் என்ற பெயரில் மிகச் சிறந்த வணிகநகரமாக திகழ்ந்துள்ளது. இங்கள்ள பெருமாள்கோயில் விக்கிரமபாண்டிய விண்ணகரம் என்ற

பெயரில் சிறப்புடன் திகழ்ந்துள்ளது. சிவன்கோயில் ஸ்ரீகயிலாயம் நாற்பத்தெண்ணாயிர ஈஸ்வரம் என்று பெயர் பெற்றிருந்தது. இவ்வூர்க் கோயில்களுக்குப் பல தானங்கள் தரப்பட்டுள்ளன. இவ்வூர் நகரத்தார் என்றழைக்கப்பட்ட வணிக ஊரவையின் நிர்வாகத்தில் இருந்துள்ளது என்பதை இவ்வூர்க் கோயில்களில் உள்ள பிற்காலப்பாண்டியர் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

## சாத்தூர் வட்டம்

விருதுநகர் மாவட்டத்தில் சாத்தூர் வட்டத்தில் முற்காலப்பாண்டியர் காலத்து வட்டெழுத்துக் கல்வெட்டுகளும் பிற்காலப்பாண்டியர் காலத்து தமிழ்க் கல்வெட்டுகளும் உள்ளன. குலசேகரபுரத்தில் கி.பி. 8ஆம் நூற்றாண்டைச் சார்ந்த எல்லைக்கல் கல்வெட்டுடன் உள்ளது. நென்மேனி கண்மாயில் கி.பி. 9ஆம் நூற்றாண்டில் இருப்பைக்குடிக் கிழவன் என்ற இருஞ்சோணாட்டு குடித்தலைவன் அவ்வேரியைத் தோற்றுவித்தது பற்றிய வட்டெழுத்துக் கல்வெட்டு காணப்படுகிறது. இருக்கண்குடியில் சாத்தூர் வட்டத்தில் இவன் செய்த ஏராளமான நீர்பாசனப் பணிகளைத் தொகுத்துக்கூறும் நீண்ட பாடல் கல்வெட்டு ஒன்று இருந்து தற்போது அழிந்துபட்டது. சாத்தூரில் இருப்பைக்குடிக்கிழவன் எடுத்த ஏரியைப் பற்றியும் புதுப்பித்த மடைகள் பற்றியும் தெரிவிக்கும் வரலாற்றுச் சிறப்புமிக்க வட்டெழுத்துக்கல்வெட்டு ஒன்று கிடைத்துள்ளது. சாத்தூர் வட்டத்திலுள்ள ஸ்ரீமாறஸ்ரீவல்லபன் (கி.பி. 815-862) காலத்து இருப்பைக்குடிக் கிழவன் பற்றிய கல்வெட்டுகள் பண்டைய நீர்பாசனப்பணிகள் குறித்துத் தெரிவிக்கும் மிக முக்கியக் கல்வெட்டுகளாகும். இவை புதியதாக ஏரியைத் தோற்றுவித்தல், பழைய ஏரிகளையும் மடைகளையும் புதுப்பித்தல் குறித்தும் பண்டைய நீர்பாசனத் தொழில் நுட்பங்கள் பற்றியும் கூறுகின்றன. சின்னமேட்டுப்பட்டியில் ஓணாம்பட்டி கண்மாய்க் கரையில் கி.பி. 13ஆம் நூற்றாண்டில் குலசேகரபாண்டியன் காலத்தில் வென்றிக்கொடி வீரக்கொல்லன் என்று பெயர் பெற்ற ஒருவன் துலாக் கிணறு ஒன்றை எடுத்ததைத் தெரிவிக்கும் கல்வெட்டு உள்ளது. பண்டு சாத்தனூர் என்றழைக்கப்பட்ட சாத்தூரிலுள்ள பெருமாள்கோயிலில் பல பிற்காலப்பாண்டியர் காலத் துண்டுக் கல்வெட்டுகள் உள்ளன.

# PREFACE

This volume is the outcome of the field work undertaken by the Epigraphists of this department in Virudhunagar district. Inscriptions copied from Aruppukkottai, Thirucchuliyal, Kariyapatty, Virudhunagar, and Sattur taluks, included in this volume, are very helpful to study the social, political, religious and economic history of this region with a number of new informations.

## INSCRIPTIONS OF ARUPPUKKOTTAI TALUK

From the Meenakshi Chokkanatha temple at Aruppukkottai, built during the 12th -13th century A.D., by the later Pandya rulers, a number of inscriptions dating back to the periods of Jatavarman Kulasekara I, Maravarman Sundara Pandya I, Emmandalamum Konda Kulasekara Pandya are copied and deciphered. As recorded is these inscriptions the ancient name of Aruppukkottai is "Senkattu Irukkai Idattuvali". Installation of certain stone sculptures like Lingapurana Deva, Aludaiya Pillaiyar, Durga and Arumthavam ceytha Nacchiyar in the niches of this temple are recorded in these inscriptions. Some land donations made to this temple are also recorded. The existence of certain market places like ViraPandyan Perunthеru, Vikkirama Pandyan pernthru, and Palivilanug peruntheru, located around the present Chokkanathaswami temple is also traceable from the inscriptions. Then Ilangai Valanchiyar, a certain group of merchants from Ceylon, have had their commercial activities in this area. As recorded in the inscriptions the name of the presiding deity of this temple is Kuralmani Isvaram Udaiyar. From this fact it is clear that the original name of the Chokkanathar temple is Kuralmanai Isvaram, and from a later date only it is popularly called as Chokkanatha temple, may be due to the impact of the popularity of the Madurai Chokkanathar temple. Digging of a water tank (very near to the Chokkanathar temple), on 1193 A.D., by one Cholagangan Arulalan Alagapperumal is recorded in an inscription engraved on the sluice of that tank. An inscription noticed near the Ramalinga textile mill records the land donation to the temple of Valavantha Amman at Aruppukkottai for the merit of Regunatha Setupati by one Thambi Udaiya Thevar. This inscription proves beyond doubt, the existence of the Amman temple from the seventeenth century, if not earliar.

## KULASEKARA NALLUR

This village which seems to have been named after the Pandya ruler Emmandalamum Kondaruliya Kulasekara Pandya, is located on the highway from

Aruppukkottai to Thirucchuliyal. The ruined Saiva temple of this village, which can be safely dated back to the 13th century A.D. proves beyond doubt the antiquity of this village. An inscription engraved in the 23rd regnal year of Maravarman Kulasekara I, which is copied from the Muniyasamy (Munniyandi) temple of this village, is a note worthy one, since both the Saka year and regnal year are recorded in it. This information is very helpful to fix the actual reign period of Emmandalamim Konda Kulasekara Pandya. The donation made by one Maniyan Kuttaduvan, a resident of Manakkavur, is recorded in this pillar inscription.

**CHETTIKURICHI**

The history of this village which is located in between Aruppukkottai and Pandalkudi is traceable from the 13th century. The Siva temple (Thiru Vettisvaramudaiya nayanar temple), the Vishnu temple (Varadaraja Perumal Koil), and the Amman temple (Uyyavandha amman temple) are in existence in this village from the later Pandya period. The original names of this village as traceable from the inscriptions are Perunthuvali and Rajadhitta Nallur. The name of the Vishnu temple as recorded in the inscriptions is 'Puravuvari Emperuman Thirukkoyil'.

**PALAVANATTHAM**

This ancient village located on the high way in between Virudhunagar and Aruppukottai seems to be a popular centre, from as early as tenth century, since the northern half of this village was called Shivapadasekaranallur, after one of titles of the great Chola King Rajaraja I. A portion of this village, where we have the Kailasanathar temple was known by the name during the later Pandya period, and so the inscriptions refer to this temple by the name Punganattu Kanchiyil Udaiyar Sri Kailasamudaiyar temple. In the centre of this village we have a Trithankara image seated on a throne. The name Raghavan is inscribed in the pedestal of that image in 16-17th century characters.

**KOVILANKULAM RECORDS**

Kovilankulam is located on the way to Madurai from Aruppukottai. There is a jain temple, which is now popularly known as Ambalappaswamy temple. It was constructed by a chieftain by name Cholakkon, around 1118 A.D., during the period of Kulotthunga Chola I. During the 12th century this village was known by the name Kumbanur. A well, to provde drinking water, also was dug, and the donar of this Charity in praised is a verse engraved in the jain temple which dates back to the 12th century A.D. The Vishnu temple, popularly known by the name Erkum alakiya perumal, which is in ruins, seems to be in existence from the 13th century A.D.

## METTUPPATTI

In this village, located west of Pandalkudi, there is a Vishnu temple by name Kariyamalalagar Koil. This temple, erected during the period of Jatavarman Kulasekara Pandya, in the 12th century A.D., was named as Kulasekara vinnagaram, after that Pandya ruler, and later on only it came to be called as Kariamalalagar Koil. The earlier name of Mettupatti is Nalur or Nahur as recorded in the inscription.

## INSCRIPTIONS OF THIRUCHULIYAL TALUK

Thiruchuli Bhuminathaswami temple, also known as Thirumeni nathaswami temple, at Thiruchuli, is one among the 14 important Siva temples sung by the Shaivite Nayanmars. In this Siva temple, sung by Sundaramurthy Nayanar, we have inscriptions dating back to the period of Rajaraja I (985A.D-1014A.D). Tenth century inscriptions of this temple mention by the names Arikesari Iswaram udaiyar temple and Mulas thanamudaiyar temple.

## PALLIMADAM

Here, in this village, we have the sepulchral (Pallippadai) temple, erected in memory of Sundara Pandya, by his younger brother Vira Pandya, who took the head of a Chola. This temple which was named after that Sundara Pandya as "Pallippadai Sundara Pandya Isvara Mudaiyar temple", is now popularly known by the name Kalanathaswamy temple. Certain stones of this temple which bear the inscriptions that refer to the Jain Monastry at Kurandi (Kurandi thirukkattampalli) could have been brought from Kurandi to this place for the construction of this Siva temple. This Jain Monastry might have been a popular one during the 8-9th century A.D.

## KALLUMADAI

Two inscriptions of Vatteluthu character dated to 10th century A.D. are found in a Siva temple in this village. The ancient name of this village is known as Thiruppalaiyur. Inscriptions of Emmandalam Konda Sundara Pandya, Maravarman Kulasekara Pandya and Jatavarman VikramaPandya are engraved here and they mention the land donations made to the Siva temple of this village.

## NARIKKUDI

Virupakchinathar temple found near this village has a number of fragmentary inscriptions. These records give the details of land donations made to a Siva temple and Vikrama Pandya Vinnagara Alwar Vishnu temple situated at Kanjai Irukkai alias Manaiyur. Creation of a new brahmadeya village is also mentioned in one of the inscriptions.

## MANUR

Inscriptions of this village record the existence of a Siva temple Anakula Isvaram by name, and the donations made to this temple during the later Pandya period.

## MARAIYUR

A solitary inscription found in this village records the donation of a village to one Chitambaraswamy for the merit of Madurai Chockalinga Nayakar.

## MUSSCELANEOUS RECORDS

Inscription found at Pumalaippatti village mentions the temple constructed in memory of a girl who immolated herself. Vira Cholan inscription mentions the existence of a Siva temple Kailasamudaiyar Koil at this village.

One stone planted at the centre of Nalur village has an inscription dated to 1105 A.D. It provides an interesting information about the dispute between the two officials Suriya devan alias Sethirayar and GanagaiKondan Rajendran and the settlement. One label inscription found on a Nandi sculpture mentions that particular nandi was made during Maravarman Sundara Pandya period at Maravar Perunkudi.

Paralacchi inscription gives the ancient name of the village as PallavaKulanthaka Nallur. Existence of a Vishnu temple at this village is known by the records of SundaraPandya. One Siva temple is known by the later Pandya records at Vakaikulam near Paralacchi.

Thoppilakarai, another village near Paralacchi, is known as Kulathur in the inscriptions. Records found in a Vishnu temple belonging to Kulothunga I and later Pandya period. This village lands were donated to a Jain centre, Virpori Vira Perumpalli. Two Jaina Thiruthankara stone figures are located in the bund of a water tank which attest the existence of a Jain Basdhi.

# உள்ளடக்கம்

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 125/2005

**மாவட்டம்:** விருதுநகர்

**வட்டம் :** அருப்புக்கோட்டை

**ஊர் :** அருப்புக்கோட்டை

**மொழி :** தமிழ்

**எழுத்து :** தமிழ்

**அரசு :** பிற்காலப் பாண்டியர்

**மன்னன் :** முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன்

**இடம் :** மீனாட்சி சொக்கநாதர் கோயில் அர்த்தமண்டப வடக்குச்சுவர்.

**ஆட்சி ஆண்டு :** 33

**வரலாற்று ஆண்டு :** கி.பி. 1249

**இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை :** 411 / 1914

**முன் பதிப்பு :** ———

**ஊர்க்கல்வெட்டு எண் :** 1

**குறிப்புரை:** அருளாளப் பெருமான் உலகநாராயணச் சக்கரவர்த்தி என்னும் தலைவன் தேவதானமாக நிலக்கொடை அளித்ததைக் கூறும் கல்வெட்டு. பூங்கா நாடு என்னும் நாட்டுப் பிரிவு காளையிருக்கை, பூலோகசுந்தரநல்லூர் என்ற ஊர்கள் அறியப்படுகின்றன. சில வரிகள் கல்வெட்டில் சிதைந்துள்ளன.

**கல்வெட்டு :**

1. திருவாய்க் கேள்விக்கு மேல்.
2. . . . . . . . . . . . . . .
3. ணாடு கொண்டு முடிகொண்ட சோழபுரத்து வீரா
4. பிஷேகம் பண்ணியருளிய *ஸ்ரீ* சுந்தரபாண்டிய தேவர்க்கு யாண்டு இருபதாவது
5. இதனெதிராமாண்டு *யரு* . . . . . . நாயற்று பூர்வபட்சத்து . . . . . . மையும் புத
6. ன் கிழமையும் பெற்ற திருவோணத்து நாள் மதுரோதய
7. வளநாட்டு சாணாட்டுப் பெருநாங்கூர் அழகன் அருளாளன்.
8. . . . . . . . . . . . . . . . . .
9. . . . . . . . . . . . . . . . . .
10. கு உலக . . . . . . . . . . .
11. . . . . . . . . . . . . . . . . . . .
12. புகலோக கண்டப் பேரேரியில் மடை
13. விளையும் நிலம் இரண்டு மா முக்காணிக்கு சூழெல்லைக்குக் கீழெல்லை உல

14. .........மண்டலி நாடாள்வான் பற்றுக்கும் மேற்கும் தென்னெல்லை மனுகுல தேவப்பே

15. ரரையன் பனையோடு செய்க்கு வடக்கும் மேலெல்லை **இக்க சிரன யிரளை செய்க்கு**

16. ...............

17. த் தெற்கும் இவ்விசைந்த பெருநான்கெல்லைக்குட்பட்ட நிலமும் கிணறும்

18. மேற்படி.......ற்குதியன் பெற்றான் பக்கல் விலைகொண்ட நிலத்துக்கு சூழெ

19. ல்லைக்கு கீழெல்லை பெருந்துவளி நாடாழ்வான் வய

20. லுக்கு மேற்கும் தென்னெல்லை உலக... நாடாழ்வான் வய

21. லுக்கும் நிகரிலி சோழப் பே(ர)ரையன் வயலுக்கும் வடக்கும் மேலெல்லை...

22. ன்முத்த....ங்கனுக்குச் சீதனம் குடுத்த வயலுக்குக் கிழக்கும் வடவெல்லை சீ

23. வலநாடாழ்வானுக்குத் தெற்கும் இவ்விசைந்த பெருநான் கெல்லையுள்பட்ட

24. நிலமும் உலக நாராயணன் சந்திக்கு அமுதுபடி வேண்டுவனவ

25. ..........................

26. ற்று மெப்பேற்பட்டனவும்.....தேவதானமாக........இப்படிக்கு சந்திராதித்தற

27. செல்வதாக கல்வெட்டுவித்துக் குடுத்தேன் அழகன் அருளாளப் பெருமாளா

28. ன உலக நாராயணச் சக்கரவர்த்தியேன் உடையார் குறள் மாணீசுவரமுடைநா

29. யனாற்கு இப்படிக்கு குடுத்த அழகன் அருளாளப் பெருமாளான உலக நாராயண

30. சக்கரவர்த்தி எழுத்து பூங்கால்நாட்டுக் காஞையிருக்கை நரபதி வாழை யூரா...

31. (ன...பூ)லோக சுந்தர நல்லூர் பெற்றான் பெற்றானான தமிழ் நாட்டரைய னெழுத்து.

32. தொண்டைநாட்டு ஓணமங்கை கிழார் மதிரையழகன் வடுகனான

33. தமிழ்ப் பல்லவரையன் எழுத்து

த.நா.அ. தொல்லியல் துறை　　　　　　　　　　தொடர் எண் : 126/2005

**மாவட்டம்:** விருதுநகர்

**வட்டம் :** அருப்புக்கோட்டை

**ஊர் :** அருப்புக்கோட்டை

**மொழி :** தமிழ்

**எழுத்து :** தமிழ்

**அரசு :** பிற்காலப்பாண்டியர்

**மன்னன் :** முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன்

**ஆட்சி ஆண்டு :** 15

**வரலாற்று ஆண்டு :** கி.பி. 1230

**இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை :** 412 / 1914

**முன் பதிப்பு :** ———

**ஊர்க்கல்வெட்டு எண் :** 2

**இடம் :** மீனாட்சி சொக்கநாதர் கோயில் அர்த்தமண்டப வடக்குச் சுவர்.

**குறிப்புரை:** வடபுறம் தேவகோட்டத்தில் இடத்துவளி தட்டான் இரட்டை அழகன் என்பவன் துர்க்கையை எழுந்தருளுவித்தான் என்னும் செய்தி கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவ
2. னச் சக்கர வத்திகள் சோ
3. ணாடு முடிகொண்ட சோ
4. ழ புரத்து வீராபிசேக
5. ம் பண்ணியருளிய சுந்தர
6. பாண்டிய தேவற்கு யா
7. ண்டு ௰ரு வது உடையார்
8. குறள் மாணிச்சுர முடை
9. ய நாயனார் கோயில் து
10. ர்கையாரை எழுந்தரு
11. ளு வித்தான் ரெட்டை அ
12. ழகனான இடத்து
13. வளி தட்டான்

த.நா.அ. தொல்லியல் துறை | தொடர் எண் : 127/2005

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **மாவட்டம்:** | விருதுநகர் | | **ஆட்சி ஆண்டு** | : | 10 |
| **வட்டம்** | : | அருப்புக்கோட்டை | **வரலாற்று ஆண்டு** | : | கி.பி. 1226 |
| **ஊர்** | : | அருப்புக்கோட்டை | **இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை** | : | 408 / 1914 |
| **மொழி** | : | தமிழ் | | | |
| **எழுத்து** | : | தமிழ் | **முன் பதிப்பு** | : | ——— |
| **அரசு** | : | பிற்காலப்பாண்டியர் | **ஊர்க்கல்வெட்டு எண்** | : | 3 |

**மன்னன்** : முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன்

**இடம்** : மீனாட்சி சொக்கநாதர் கோயில் அர்த்த மண்டபம்.

**குறிப்புரை:** இக்கோயில் பூசைப்பணி செய்யும் பதிபாத மூலத்துப் பட்டுடை பஞ்சாசாரியர், இவ்வூர் சீவல்லவன் பெருந்தெருவில் இருந்த அரைசூர் உடையான் உலக சமைஞ்சிதனுக்கு நிலம் விற்றதைத் தெரிவிக்கும் கல்வெட்டு.

**கல்வெட்டு :**

1. *ஸ்வஸ்திஸ்ரீ* கோமாறபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் சோணாடு வ
2. ழங்கியருளிய சுந்தரபாண்டிய தேவர்க்கு யாண்டு பத்தாவது மி
3. துன நாயற்று அமரபக்கத்து திரையோதசியும் திங்கட்கிழமையும் பெ
4. ற்ற உரோகிணிநாள் வெண்பு நாட்டு செங்காட்டு இருக்கை இடத்து வெளி உ
5. டையார் குறள் மணீசுவரமுடைய நாயனார் கோயில் பதிபாதமூலப் பட்டுடை
6. ப் பஞ்சாச்சாரியரோம் இவ்வூர் சீவல்லவன் பெருந்தெருவான தேசியாசிரியப் பட்டணத்
7. து அரைசூர் உடையான் உடையான் காணியான உலக சமைஞ்சிதனுக்கு நாங்கள் சண்
8. டேசுவர விலையாக விற்றுக் குடுத்த குளமாவது இவ்வூர் வினாயகப் பிள்ளையார் எ...
9. ...........
10. தத்து வலிய பிள்ளையார் தேவதானம் சிறுமணக்குளத்துச் சூழெல்லைக்கு கீழெல்
11. லை நிலைதாங்கியேரி நீரினுக்கு மேற்கு நாட்டின திருச்சூலக் கல்லுக்கு மேற்கும் தென்னெல்லை
12. பாறையில் கல்லுரலுக்கு நாட்டின திருசூலக் கல்லுக்கும் வடக்கும் மேலெல்லை

13. இக்குளத்து நீர் நக்கலுக்கு கிழக்கும் வடவெல்லை உடையார் குறள் மாணீசுவர

14. முடைய நாயனார் தேவதானம் பெரிய மணக்குளத்து எல்லைக்குத் தெற்கும் இன்னான்

15. கெல்லைக்கு உட்பட்ட நீர்நிலமும் புன்செய்யும் இக்குளத்துநத்தமும் நத்தப்பாழும் குளமும்

16. குளப்பரப்பும் மேனோக்கிய மரமும் கீணோக்கிய கிணறும் மற்று மெப்பேற் பட்டனவும் விலை

17. (..........................)

18. டுத்தோம் பதிபாதமூலப் பட்டுடை பஞ்சாசாரியரோம் உலக சமைஞ்சிதற்கு இப்படி

19. விற்றுக் குடுத்த குளத்தி... நிலத்துக்கும் புன்செய்க்கும் பயிரத்துப் பயிர் நிலத்துக்

20. குப் பதினாறு சாண்கோலால்... த்தோம் இவ்வூர் மிடிகைக் காலால் அளக்குந் நெல்லு நாற்கல...

21. மும் புன்செய்க்கு இக்கோல் (மா)த்தால் பதினாறு மேனி காற் திரமமும் இறுப்பாராகவும் இப்படி

22. யிற் கொண்ட நிலத்தாலும்... நெல்லுக் கற் பதற் செத்தை உள்ளிட்டிவ் வாசி நீக்கி இன்னாய

23. னார் ஸ்ரீபண்டாரத்திலே அளந்து... ந்த நெல்லுக்கு திரமத்துக்கும் தரவு கொள்வ

24. னாகவும் இப்படி சம்மதித்து சண்டேசுவரப் பெருவிலையாகப் பிரமாணம் பண்ணிக்கு

25. குத்தோம் இன்னாயனார் கோயில் பதிபாத மூலப்பட்டுடை பஞ்சாச்சாரியரோம் உலக ச...

**மாவட்டம்:** விருதுநகர்

**வட்டம் :** அருப்புக்கோட்டை

**ஊர் :** அருப்புக்கோட்டை

**மொழி :** தமிழ்

**எழுத்து :** தமிழ்

**அரசு :** பிற்காலப் பாண்டியர்

**மன்னன் :** எம்மண்டலமுங் கொண்டருளிய குலசேகரன்

**ஆட்சி ஆண்டு :** 1279 (11வது)

**வரலாற்று ஆண்டு :** கி.பி. 1279

**இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை :** -

**முன் பதிப்பு :** –

**ஊர்க்கல்வெட்டு எண் :** 4

**இடம் :** மீனாட்சி சொக்கநாதர் கோயில், அர்த்தமண்டபம் வடக்குச் சுவர்.

**குறிப்புரை:** எம்மண்டலமுங் கொண்டருளிய குலசேகரதேவரின் பதினொன்றாம் ஆட்சி ஆண்டில் புகலோகண்டநேரியால் நீர்பாயும் நிலங்களைப் பிள்ளையார் கோயிலுக்குக் கொடை யளிக்கப்பட்ட செய்தி இடம் பெறுகிறது.

**கல்வெட்டு :**

1. . . . . .
2. . . . . உடையார்
3. ணிசு ரமுடைய நாயனார் கோயில் சிவபிரா
4. முடைய பிள்ளைக்கு நாயினார்எம்மண்டலமுங்
6. கொண்டருளிய குலசேகரதேவற்கு யக . . .
7. . . . காத்திகை மா .. இவ்வூர் புகலோககண்டனேரி . . .
8. . . . ரும் . . . என்னும் மடையால் நீர்பா
9. ... கோலால்
10. ........... ஒருமாவாக கும்பனூர் முத்தரையன்...
11. ம் இருமாவரை முந்திரிகையும் துவ...
12. நிலம் அரைமாவின் கி.. ன் அரைமா முக்கா
13. ணியும் அரு... சொக்கன் நிலன் முக்காணிய
14. ரை காணி தென்னிலங்கை நாடா
15. அம்மாவாசையில்
16. க்கவும் இவ்வூரில் இடத்ததுவளியில் பி

17. ள்ளையாற்கு இவ்வாண்டு முதல் தேவதானமாக

18. காராண்மை காணியாக

19. நிவந்தத்து அமுதுபடி உள்ளிட்ட

20. த்துக்கு ஊர்காலால் ...

21. நெல்[illegible]வு இறுக்கக்கடவ

22. வும் இப்படிக்கு

23. டாகக் கொண்டு சந்திராதித்தவற்...

24. க்கல்லிலும் செம்பிலும் வெட்டிக்கொ

25. அருளாளன் அழகன்னான சோழகங்க

26. எழுத்து இவை.... செய்யான்...

27. ராயன் எழுத்து

**மாவட்டம்:** விருதுநகர்

**வட்டம் :** அருப்புக்கோட்டை

**ஊர் :** அருப்புக்கோட்டை

**மொழி :** தமிழ்

**எழுத்து :** தமிழ்

**அரசு :** பிற்காலப்பாண்டியர்

**மன்னன் :** சுந்தரபாண்டியன்

**ஆட்சி ஆண்டு :** 11வது (கி.பி.1227)

**வரலாற்று ஆண்டு :** கி.பி. 13ஆம் நூற்றாண்டு

**இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை :** -

**முன் பதிப்பு :** ———

**ஊர்க்கல்வெட்டு எண் :** 5

**இடம் :** மீனாட்சி சொக்கநாதர் கோயில், வடக்குபுற அர்த்த மண்டபம் அடித்தளம்.

**குறிப்பு :** சுந்தரபாண்டியனின் பதினோறாம் ஆட்சி யாண்டில் விழுப்பாதராயர் என்னும் தலைவன் வைத்த திருவீதி நாயனாற்கு இறையிலி தேவதானமாகப் புகலோகக் கண்ட பேரேரி நிலத்தைக் கொடுத்த செய்தி கூறப்படுகிறது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ சோழகங்க தேவன் ஒலை ஸ்ரீசுந்தரபாண்டிய தேவற்கு யாண்டு பதினொன்றாவது மார்கழி மாதம் அஞ்சாந்தியதி வெண்புநாட்டு செங்காட்டிருக்கை
2. (ளிவித்த) முதலியார் இனக்குநல்ல பெருமாளுக்கு ... ாாா... ளுக்கும்... லனான... விழுப்பா... தராயர் எழுந்தருளுவித்த திருவீதி நாயனாற்கு இறைஇலி தேவதானமாக இவ்வூர் புகலோக கண்டப் பேரேரி
3. .... விலை கொண்ட ஊர்களில்

| | | | |
|---|---|---|---|
| **மாவட்டம்:** | விருதுநகர் | **ஆட்சி ஆண்டு** | : 8 |
| **வட்டம்** : | அருப்புக்கோட்டை | **வரலாற்று ஆண்டு** | : கி.பி. 1223 |
| **ஊர்** : | அருப்புக்கோட்டை | **இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை** | : 407 / 1914 |
| **மொழி** : | தமிழ் | | |
| **எழுத்து** : | தமிழ் | **முன் பதிப்பு** | : – |
| **அரசு** : | பிற்காலப் பாண்டியர் | **ஊர்க்கல்வெட்டு எண்** | : 6 |
| **மன்னன்** : | மாறவர்மன் சுந்தரபாண்டியன் | | |

**இடம்** : மீனாட்சி சொக்கநாதர் கருவறை மேற்குச் சுவர்.

**குறிப்புரை:** மற்றொரு கல்வெட்டில் அருந்தவஞ் செய்த நாச்சியாரை எழுந்தருளுவித்த சேகல் சேவகத்தேவன் மேற்குத் தேவகோட்டத்தில் இலிங்கோத்பவரை எழுந்தருளிவித்த செய்தி கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ சோணாடு வழங்கி
2. யருளிய சுந்தர பாண்டிய தேவற்கு
3. யாண்டு அ வது இடத்துவளி வீ
4. ரபாண்டியன் பெருந் தெருவிற்
5. தென்னிலங்கை வளஞ்சியரிற்
6. சேகல் சேவகத் தேவனான இலுப்பை
8. யூர் கிழவன் இலிங்கபுராண தே
9. வரை எழுந்தருளு வித்தான்.

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 131/2005

**மாவட்டம்:** விருதுநகர்

**ஆட்சி ஆண்டு** : 3வது

**வட்டம்** : அருப்புக்கோட்டை

**வரலாற்று ஆண்டு** : கி.பி. 13 ஆம் ஆண்டு

**ஊர்** : அருப்புக்கோட்டை

**இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை** : -

**மொழி** : தமிழ்

**எழுத்து** : தமிழ்

**முன் பதிப்பு** : –

**அரசு** : பிற்காலப் பாண்டியர்

**ஊர்க்கல்வெட்டு எண்** : 7

**மன்னன்** : சுந்தரபாண்டியன்

**இடம்** : மீனாட்சி சொக்கநாதர் கோயில், கருவறை தெற்குச் சுவர்.

**குறிப்புரை:** சுந்தரபாண்டியனின் மூன்றாம் ஆட்சியாண்டில் (கி.பி.1218ல்) குறள்மாணி ஸ்வரமுடையார் கோயில் அவனிநாராயண தேவன் என்பவன் திருஞானசம்பந்தர் திருமேனியை அமைத்த செய்தி கூறப்பட்டுள்ளது.

**கல்வெட்டு :**

1. திரிபுவனச் சக்கரவத்திகள் சிரிசுந்தர
2. பாண்டிய தேவற்கு மூன்றாவது நாயனா
3. ர் சொக்காண்டார் அருளிச் செயல்படி
4. அவனி நாராயணதேவன் இடத்து
5. வளி உடையார் குறண்மாணிசுரமு
6. டைய நாயனார் கோயிலில் ஆளுடை
7. ய பிள்ளையாரை நாயனார் சொக்கா
8. ண்டார் பிறந்த நாள்....
9. .........
10. ........ குறள் மாணிச்
11. ... தான் . (க்கடமை)
11. .... யாகமும் .... இத்தா
12. .... அமுதுபடியும் சாத்துப்படியும்
13. .....

| | | | | | |
|---|---|---|---|---|---|
| **மாவட்டம்** | : | விருதுநகர் | **ஆட்சி ஆண்டு** | : | 8 |
| **வட்டம்** | : | அருப்புக்கோட்டை | **வரலாற்று ஆண்டு** | : | கி.பி. 1223 |
| **ஊர்** | : | அருப்புக்கோட்டை | **இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை** | : | 406 / 1914 |
| **மொழி** | : | தமிழ் | | | |
| **எழுத்து** | : | தமிழ் | **முன் பதிப்பு** | : | – |
| **அரசு** | : | பிற்காலப் பாண்டியர் | **ஊர்க்கல்வெட்டு எண்** | : | 8 |
| **மன்னன்** | : | முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் | | | |

**இடம்** : மீனாட்சி சொக்கநாதர் கோயில் அர்த்த மண்டபத் தென்சுவர்.

**குறிப்புரை:** இடத்துவளி விக்கிரம பாண்டியன் பெருந்தெருவில் இருந்த தென்னிலங்கை வளஞ்சியர் என்னும் வணிகக் குழுவினன் ஒருவன் சேகல் சேவகத் தேவன் இக்கோயில் அம்மன் அருந்தவஞ் செய்த நாச்சியாரை எழுந்தருளுவித்தான் என்னும் செய்தி கூறப்பட்டுள்ளது. அருப்புக்கோட்டை நகரத்தின் முன்னைப் பெயர் இடத்துவளி எனத் தெரிகிறது. விக்கிரம பாண்டியன் பெருந்தெரு என்ற பெயரில் வணிகச் சந்தை ஒன்று இங்கு இருந்துள்ளது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ சோணாடு வழங்கியருளி
2. யருளிய சுந்தரபாண்டிய தேவற்கு யாண்டு அ
3. வது இடத்துவளி விக்கிரம பாண்டியந்
4. பெருந் தெருவில் தென்னிலங்கை வளஞ்சி
5. யரில் சேகல் சேவகத் தேவனான இலுப்பை
6. யூர் கிழவன் அருந்தவஞ் செய்த நாச்சியாரை எ
7. முந்தருளுவித்தார்.

த.நா.அ. தொல்லியல் துறை | தொடர் எண் : 133/2005

| | | | | |
|---|---|---|---|---|
| மாவட்டம் | : விருதுநகர் | ஆட்சி ஆண்டு | : | 18 |
| வட்டம் | : அருப்புக்கோட்டை | வரலாற்று ஆண்டு | : | கி.பி. 1207 |
| ஊர் | : அருப்புக்கோட்டை | இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை | : | 403 / 1914 |
| மொழி | : தமிழ் | | | |
| எழுத்து | : தமிழ் | முன் பதிப்பு | : | – |
| அரசு | : பிற்காலப் பாண்டியர் | ஊர்க்கல்வெட்டு எண் | : | 9 |
| மன்னன் | : முதலாம் சடையன் குலசேகரன் | | | |

இடம் : மீனாட்சி சொக்கநாதர் கோயில் அர்த்த மண்டபத் தென்சுவர். முதல் கல்வெட்டின் கீழ் உள்ளது.

குறிப்புரை: செங்காட்டிருக்கை இடத்துவளி குறள்மாணி ஈஸ்வரமுடைய நாயனார் கோயிலில் கைக்கோளன் ஒருவன் அர்த்த மண்டபத்தில் திருவாயில் நிலைக்கால் அமைத்தான். இறைவன் பெயரும்ஊரின் பெயரும் அர்த்தமண்டபம் கட்டப்பட்ட செய்தியும் இடம் பெற்றுள்ளது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ கோச்சடைய பன்மரான திரிபுவனச் சக்கர வத்திகள்
2. ஸ்ரீ குலசேகர தேவற்கு யாண்டு ௰௨ வதின் எதிர் ௹ சாவது வெண்பில் நா
3. ட்டுச் செங்காட்டிருக்கை இடத்துவளி நாயனார் குறள் மாணி
4. ஸ்வரமுடைய நாயனார் திருமடை விளாகத் தில் கைக்கோளரில்
5. குழைஞ்சான் சங்கனான புரவரி மாராயன் இன்னாயனார் கோயிலில் அத்த
6. மண்டபத்தில் திருவாயில் திருனிலைக்கால் வெட்டிவித்தான் இது இவ
7. ன் தன்மம் ஸ்வஸ்திஸ்ரீ

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 134/2005

**மாவட்டம்:** விருதுநகர்

**வட்டம் :** அருப்புக்கோட்டை

**ஊர் :** அருப்புக்கோட்டை

**மொழி :** தமிழ்

**எழுத்து :** தமிழ்

**அரசு :** பிற்காலப் பாண்டியர்

**மன்னன் :** முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன்

**இடம் :** அர்த்தமண்டபத் தென் சுவர்.

**ஆட்சி ஆண்டு :** -

**வரலாற்று ஆண்டு :** கி.பி. 13 ஆம் ஆண்டு

**இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை :** 405 / 1914

**முன் பதிப்பு :** –

**ஊர்க்கல்வெட்டு எண் :** 10

**குறிப்புரை:** கோயில் நந்தவனத்துக்காக மடபதி ஆலம்பாக்க முடையான் பெருமான் உதயனான சதாசிவ தேவனுக்குக் காராண்மையாக நிலம் வழங்கப்பட்ட செய்தி இடம் பெற்றுள்ளது. கல்வெட்டுத் தொடக்கத்தில் நான்கு வரிகள் சிதைவுற்றுள்ளன.

**கல்வெட்டு :**

1. .....
2. யருளிய சுந்தரபாண்டிய.

3.,4. ...

5. ற் வெண்பு நாட்டு செங்காட்டு இருக்கை இடத்துவளி உடையார் குறழ்
6. மாணீச்சுர முடைய நாயனார் கோயில் தண்டேசுவர னேன் இன்னாயனார்
7. திருமடை விளாகத்து மடபதிகளில் ஆலம்பாக்க முடையான் பெருமா
8. ன் உதையனான சதாசிவ தேவனுக்கு தண்டேசுவர பிரமாணம்
9. பண்ணிக் குடுத்து... இந்நாயனார் மனகுளத்து (தேவனுக்கு)க் காராழ்
10. மை செய்து குடுத்த நிலத்துக்கு சூழெல்லைக்குக் கீழெல்லை சீகா
11. ரியப் பேற்றுக்கு மேற்கும் தென்னெல்லை சிறுமணக் குளத்துக்கரை
12. க்கு வடக்கும் மேலெல்லை நம்பாண்டான் செய்க்குக் கிழக்கும் வடவெல்லை மா
13. ண போகத்துக்குத் தெற்கும் உட்பட்ட தடி பல நிலம் இருமாவும் காரா
14. ழ்மையாகப் பண்ணிக் குடுத்தோம் தென்னிலங்கைக் (கோன்)...
15. ரு னார்க்கு ரெண்டு திருநந்தவானம் செய்து திருப்பளித் தாமம்...

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 135/2005

**மாவட்டம்:** விருதுநகர்
**ஆட்சி ஆண்டு** :

**வட்டம்** : அருப்புக்கோட்டை
**வரலாற்று ஆண்டு** : கி.பி. 13 ஆம் ஆண்டு

**ஊர்** : அருப்புக்கோட்டை
**இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை** : 402 / 1914

**மொழி** : தமிழ்

**எழுத்து** : தமிழ்
**முன் பதிப்பு** : –

**அரசு** : பிற்காலப் பாண்டியர்
**ஊர்க்கல்வெட்டு எண்** : 11

**மன்னன்** : முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன்

**இடம்** : மீனாட்சி சொக்கநாதர் கோயில் அர்த்த மண்டபத் தென்சுவர்.

**குறிப்புரை:** ஊரவரும், காரணவரும் இணைந்து இக்கோயிலில் மூன்று விளக்கு எரிக்க எண்ணை வழங்கியதையும், அதை ஏற்று கைக்கோளன் குழைஞ்சான் பிரளவிய விடங்கனான இடத்துவளி மாராயன் விளக்கு எரிக்கச் செய்தான் என்பதும் குறிப் பிடப்படுகிறது. சிமிண்ட் பூச்சால் சில இடங்களில் எழுத்துக்கள் மறைந்துள்ளன.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ கோமா... சக்கரவர்த்திகள் சோணாடு கொண்
2. டருளிய சுந்தரபாண்டிய தே..வது செங்காட்டிருக்கை இடத்துவ
3. ளியிற் பழிவிலங்கிப் பெருந்தெருவில்... ஊராய் இசைந்த ஊரோமும் காரணவரோடு
4. மிவ்வூர் நாயனார் குறள்மாணிஸ்வரமுடைய கோயிற் கைக்கோளரிற் குழைஞ்சான் பிரளய விடங்க
5. னான இடத்துவளி மாராயனுக்கு நாங்கள் விற்றுக் கொடுத்த நாள்வழி முட்டை யாவது எங்கள் செக்
6. கொன்றி னாள் வழி யோரெண்ணை முட்டை சந்திராதித்தவரை செல்வதாக இவனுக்கு நாங்கள்
7. விற்றுக் கொடுக்க இவன் இந்நாயனார் கோயிலுக்கு நித்தம் மூன்று விளக்கு இவ்வெண்ணெய் முட்
8. டையொன்றுங் கொண்டு செலுத்தவதாகக் கொடுத்தமை யிலிவனுக்... நாள்
9. வழி யெண்ணை முட்டை யொன்று முட்டாமற் சந்திராதித்தவற் செலுத்துவதாகச் சம்ம
10. தித்துக் கல்லிலே வெட்டிக் கொடுத்தோம் பழிவிலங்கிப் பெருந்தெருவி லூராயிசைந்
11. த வூரோமும் காரணவரோமும்

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 136/2005

**மாவட்டம்:** விருதுநகர்

**வட்டம் :** அருப்புக்கோட்டை

**ஊர் :** அருப்புக்கோட்டை

**மொழி :** தமிழ்

**எழுத்து :** தமிழ்

**அரசு :** -

**மன்னன் :** -

**ஆட்சி ஆண்டு :** -

**வரலாற்று ஆண்டு :** சகம் 1115; கி.பி.1193.

**இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை :** -

**முன் பதிப்பு :** –

**ஊர்க்கல்வெட்டு எண் :** 12

**இடம் :** சொக்கலிங்கபுரம் ஊருணியில் தண்ணீர் விழும் தூம்பிலுள்ள கல்வெட்டு.

**குறிப்புரை:** சொக்கலிங்கபுரம் ஊரணி, சகஆண்டு 1115 ஆம் ஆண்டில், திருவாலவாயுடையான் சோழகங்கன் மகன் அருளாளரழகப் பெருமான் என்பவரால் அமைக்கப்பட்டமையைத் தெரிவிக்கிறது. இவ்வூரணி அமைந்துள்ள இடத்திற்குக் கி.பி. 12ஆம் நூற்றாண்டளவில் 'செங்காட்டு இடத்துவளி' என்ற பெயர் வழங்கியுள்ளமையையும் இக்கல்வெட்டு புலப்படுத்துகிறது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ திருவா
2. லவாயுடை யா
3. ன் சோழகங்க
4. ன் மைந்தன் அ
5. ருளாளரழகப் பெ
6. ருமாள் பொரு ச
7. கற்கே யுரைக்கீ
8. ற் செங்காட்டிட
9. த்துவளி யூரணி
10. செய் தாயிரத்
11. து நூற்றொரு
12. பத்தைஞ்சு

த.நா.அ. தொல்லியல் துறை

தொடர் எண் : 137/2005

**மாவட்டம்:** விருதுநகர்

**வட்டம் :** அருப்புக்கோட்டை

**ஊர் :** அருப்புக்கோட்டை

**மொழி :** தமிழ்

**எழுத்து :** தமிழ்

**அரசு :** பிற்காலப் பாண்டியர்

**மன்னன் :** குலசேகரன்

**ஆட்சி ஆண்டு** : 15

**வரலாற்று ஆண்டு** : கி.பி. 13 ஆம் ஆண்டு

**இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை** : 414 / 1914

**முன் பதிப்பு** : –

**ஊர்க்கல்வெட்டு எண் :** 13

**இடம் :** மீனாட்சி சொக்கநாதர் கோயில் அர்த்த மண்டபத் தென்சுவர்.

**குறிப்புரை:** வெண்புள நாட்டு செங்காட்டிருக்கை இடத்துவளியைச் சார்ந்த திருவால வாயுடையானான சோழகங்கன் அழகப்... என்பவது பெயர் குறிப்பிடப்படுகிறது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவநசக்கரவத்திகள் ஸ்ரீ குலசே
2. கரதேவற்கு யாண்டு பதிமூன்றாவதின் எதிர்
3. இரண்டாவது ஸ்ரீ பாண்டி மண்டலத்து
4. மதுரோதைய வளநாட்டு வெண்புளநாட்டு
5. செங்காட்டிருக்கை இடத்துவளி திருவா
6. லவாயுடையானான சோழகங்கன் அழகப்

**மாவட்டம்:** விருதுநகர்

**ஆட்சி ஆண்டு** :

**வட்டம்** : அருப்புக்கோட்டை

**வரலாற்று ஆண்டு** : சக ஆண்டு 1090, கி.பி. 1168

**ஊர்** : அருப்புக்கோட்டை

**இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை** : 413 / 1914

**மொழி** : தமிழ்

**எழுத்து** : தமிழ்

**முன் பதிப்பு** : –

**அரசு** : பிற்காலப் பாண்டியர்

**ஊர்க்கல்வெட்டு எண்** : 14, 15

**மன்னன்** : -

**இடம்** : வாழவந்த அம்மன் கோயில் கருவறை கிழக்கு மற்றும் வடசுவர்.

**குறிப்புரை:** இத்துண்டுக் கல்வெட்டுகளில் ஒன்று சோழகங்கனின் செயலையும் கோயில் ஒன்றிற்குப் பதினாறுசாண்கோலால் நிலம் அளந்து வழங்கிய நிலக்கொடை பற்றியும் கூறுகிறது. மற்றொன்று சோழகங்கன் என்பவன் செங்காட்டிருக்கை இடத்துவளியில் பெருமாள்கோயில் ஒன்றினை எடுத்தது பற்றிக் கூறுகிறது.

**கல்வெட்டு :**

14

1. கடமை பதினாறு சாண் கோலால்
2. ருமா.களும் மாத்தால்தரு... னால்
3. ...... கலம் இந்த .... ஆழ்வார்
4. ..... பயிறுத. ணபராக துநகொ......

15

1. ஸ்வஸ்திஸ்ரீ தி(ட மலை)வேற் சோழகங்கதேவ
2. ன்செல்சகரற் சூட்டிய யாண்டாயிரத்துத் ெ(தா)
3. ன்னூற்டிற் காட்டினான் தேராழகிய் யாழ்வா
4. ரைச் செங்காட்டிடத்துவளிப் பார்ரழகு காணர
5. ப் பரந்து

த.நா.அ. தொல்லியல் துறை தொடர் எண் : 139/2005

**மாவட்டம்:** விருதுநகர்

**வட்டம் :** அருப்புக்கோட்டை

**ஊர் :** அருப்புக்கோட்டை

**மொழி :** தமிழ்

**எழுத்து :** தமிழ்

**அரசு :** பிற்காலப் பாண்டியர்

**மன்னன் :** சுந்தரபாண்டியன்

**ஆட்சி ஆண்டு :** 11வது

**வரலாற்று ஆண்டு :** கி.பி. 13 ஆம் ஆண்டு

**இந்தியக் கல்வெட்டு ஆண்டு அறிக்கை :** -

**முன் பதிப்பு :** –

**ஊர்க்கல்வெட்டு எண் :** 16

**இடம் :** வாழவந்த அம்மன்கோயிலில் உள்ள தனிக்கல்.

**குறிப்புரை:** வெண்புநாட்டு செங்காட்டிருக்கை இடத்துவளி கோயிலில் திருவிளக்கு எரிப்பதற்காக நிலக்கொடை அளித்ததை இக்கல்வெட்டு தெரிவிக்கிறது.

**கல்வெட்டு :**

1. ஸ்வஸ்திஸ்ரீ சுந்தரபாண்டிய
2. தேவற்கு யாண்டு *யக*
3. ஆவது வெண்புனாட்டு செ
4. ங்காட்டிருக்கை இடத்துவளி
5. மேல்....
6. செங்காட்டிருக்கை....
7. வானேந்குற்றியனுக்கு...
8. ..........
9. .........
10. ........ இரண்டு
11. (மாவும்)இது திருவிளக்கு இரண்டெ
12. ரிப்பதாக இன்னிலம் னாலும....
13. . டந்தை தேவற்கு .......
14. .............

